Regd: No. TN - MS (C) 24.. Tamil Daily of the People MADRAS Phone: 4202
POST WITHOUT PRE-PAYMENT LICENCE No: G-6 TN-MS (C)P. P. 55




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




மலர் 12 சென்னை 31-3-1988 வியாழன் வெளியூர 1-4-1988 வெள்ளி 63

★ தமிழகத்தின் தலைநகரில் 9 ஆட்டோக்கள் ஒரு வேனில் வன்முறை கோஷங்களோடு ஊர்வலமாக வந்துதீப்பந்தங்களைவீசி, தீவைத்துசூறையாட கொலை முயற்சி செய்ய முடியுமானால் ஆட்சி என்று ஒன்று இருக்கிறதா? இல்லையா?

★ நான் நினைத்தால் ஆர்.எம்.வீ. உயிரோடு திரும்ப முடியாது என்று மாஜி அமைச்சர் ஒருவர் பகிரங்கமாக பேசியது பற்றி எம் பி க்கள் மனு கொடுத்தார்களே- ஆளுநர் அவர்களே இதுவரை நீங்கள் எடுத்த நடவடிக்கை என்ன?

★ தமிழகத்தின் பொது அமைதிக்கு எதிராக ஜெயலலிதா கும்பல் சவால் விட்டு நிற்பதை அனுமதிக்கப் போகிறீர்களா?

★ தங்கள் பாதுகாப்பிற்கு இனி வேறு வழிஇல்லை என அனைவரும் சட்டம், ஒழுங்கைத் தங்கள் கையில் எடுத்துக்கொண்டால் தமிழ்நாடு தாங்குமா?

### சைதை துரைசாமியை குடும்பத்தோடு எரித்துக் கொலைசெய்ய

# ஜெயலலிதா குண்டர்கள் பயங்கர வெறியாட்டம்

## வீடு எரிந்தது-டைப் மிஷின், ஜெராக்ஸ்மிஷின் தொலைபேசி சர்வநாசம்- மனைவியும், குழந்தையும் தப்பிய அதிசயம்

சென்னை, மார்ச் 31- கழகத்தின் முன்னணிச் செயல் வீரரும், முன்னாள் சட்டமன்ற உறுப்பினருமான சைதை துரைசாமியையும் அவரது மனைவி, மகனையும் உயிரோடு தீ வைத்துக்கொளுத்திச்சாம்பலாக்க ஜெயலலிதா கும்பல் குண்டர்கள் வன்முறை வெறியாட்டம் ஆடினார்கள். வீட்டின் முன்புறம் பார்வையாளர்கள் அமர போடப்பட்டிருந்த பெரிய கொட்டகைமீதும், தொலைபேசி, டைப் மிஷின் ஜெராக்ஸ் மிஷின், ஆகியவை மீதும் ஜெயலலிதா குண்டர்கள் தீப்பந்தம் வீசினார்கள் அவை முற்றிலுமாக எரிந்து நாசமாகி விட்டன.



வீடு தீப்பற்றிஎரிய புகைசூழ, வன்முறையாளர்கள் பயங்கர கூச்சல் போட்டு சுற்றுப் புறத்தையே குலைநடுங்க வைத்த நிலையில் வீட்டிலிருந்த துரைசாமியின் மனைவி மல்லிகா தனது ஒரே மகனான வெற்றி தியாகுவை பக்கத்து வீட்டுக்குள் தூக்கி யெறிந்து தானும் மிகவும் சிரமப்பட்டு சுவரேறிக் குதித்து உயிர் பிழைத்தார்

சைதை துரைசாமி நேற்று (மார்ச் 30ந்தேதி) சென்னை எம்ஜிஆர் நகரில் ஆர் எம் வீ முன்னிலையில் நடைபெற்ற கழகசெயல்வீரர்கள் கூட்டத்திற்குச் சென்றிருந்தார். வன்முறை குண்டர்களுக்கு சைதை துரைசாமி வீட்டில் இல்லாதது தெரியாது

சைதை துரைசாமியையும் அவருக்குப் பக்கபலமாக சைதைத்தொகுதியில் திகழும் முக்கியமான கழகத் தொண்டர்களையும் அரசியல் களத்தில் நேரடியாகச் சந்திக்க முடியாத ஜெயலலிதா கட்சிக்குண்டர்கள் அவரையும் அவரது ஆதரவாளர்களையும் தீர்த்துக் கட்ட நீண்ட நாட்களாகவே சதித்திட்டம் தீட்டி வருகின்றனர். இந்தச் சதித் திட்டத்தை நிறைவேற்ற நேற்று பெரும் கும்பலாக சைதைப் பகுதியில் ஜெயலலிதா குண்டர்கள்கூடினார்கள்.

## வன்முறை ஊர்வலம்

சைதைப் பகுதியில் கூடிய குண்டர்கள் கத்தி, அரிவாள் தீப்பந்தங்கள் கம்புகள் இரும்புத் தடிகளுடன் 9 ஆட்டோக்களிலும் ஒரு வேனிலும் புறப்பட்டார்கள் கழகத்தையும்துரைசாமியையும் பற்றி மிக மோசமான எழுத முடியாத வார்த்தைகளால்திட்டிகோஷமிட்டார்கள்.

ஜெயலலிதாவின் குண்டர்கள் ரமேஷ், சுரேஷ் உள்பட முப்பதிற்கும் மேற்பட்டவர்கள் 9 ஆட்டோக்கள் மற்றும் ஒரு வேனில் வன்முறை கோஷங்களோடு சைதை தொகுதி ஜோன்ஸ் ரோடு அருகிலுள்ள ஆசிரியா ராமச்சந்திரன் நகரிலுள்ள கழக 145வது வட்டச் செயலாளா கடும்பாடி வீட்டிற்கு வந்து முற்றுகையிட்டனர். கடும்பாடியும் அப்போது வீட்டில் இல்லை,

கட்டை கம்புகள் கற்களை கடும்பாடி வீட்டின் மீது வீசினார்கள் வீட்டிலிருந்த புரட்சித்தலைவரின் படம் மற்றும் புகைப் படங்கள் பல்புகள் கண்ணாடிப் பொருட்களையும்கல்வீசி உடைத்து நொறுக்கினா.

இந்தக் கல்வீச்சு வன்முறைச் சம்பவங்களில் கடும்பாடியின் மனைவி விஜய லெட்சுமியும் மைத்துனரும் காயமடைந்தனா

கடும்பாடியின் வீட்டிலிருந்து புறப்பட்ட ஜெயலலிதா ஆதரவுக் கொலை வெறிக்கும்பல் வன்முறை கோஷங்களைஎழுப்பியவாறு நேராக சைதை துரைசாமி வீட்டிற்கு வந்து சேர்ந்தது அப்போது இரவு 9.50 தான் ஜனநடமாட்டம் பஸ் போக்குவரத்து எல்லாமிருக்க தமிழகத்தலைநகரில் இப்படியொரு வன்முறைவெறியாட்டம்.

## தீப்பந்தம் வீச்சு

சைதை துரைசாமியின் வீட்டின் முன்பாக பார்வையாளர்கள் வசதியாக உட்கார அகலமான பெரிய தென்னங்கீற்று கொட்டகை அமைத்து இருந்தார்தொகுதி மக்களுக்கு மனுக்களை இலவசமாக "டைப்" செய்து கொடுப்பதற்கும் 'ஜெராக்ஸ்" பிரதிகள் எடுக்கவும் மிஷின்களும் தொலைபேசியும் மற்றும் டேபிள், நாற்காலிகள் இந்த கொட்டகையில் இருக்கும்.

வன்முறையாளர்கள் துரைசாமி வீட்டையடைந்ததும் "துரைசாமியை கொல்லுங்கடா" "உயிரோடு கொளுத்துங்கடா" "பொண்டாட்டி புள்ளையும் சேர்த்து எரியுங்கடா" என்று பயங்கர சத்தம் போட்டனர்.

ஆட்டோக்களிலும், வேன்களிலும், தயாராக வைத்திருந்த பந்தங்களில் பெட்ரோலை ஊற்றிக் கொளுத்தி கொட்டகையின் மீதும் வீட்டின் மீதும் வீசினார்கள்.

வன்முறையாளர்கள்வைத்த தீகொழுந்து விட்டு எரிந்தது. இதனால் கொட்டகை தொலைபேசி. "டைப் ரைட்டாமிஷின்' 'ஜெராக்ஸ் மிஷின்நாற்காலி அனைத்தும் எரிந்து சாம்பலாயின. அலுவலக அறையில் இருந்த

(ம் பக்கம் பார்க்க)

★ கல்லூரி விழாவுக்கு வராதே! மாணவர்கள் எதிர்ப்பு- குண்டர்களை ஏவி மாணவர்களின் மண்டையைப்பிளந்தார் ஜெயலலிதா!

★ கல்லூரி முதல்வர் சொன்னதையும் மீறி, இதயதெய்வம் படததை "நானே திறப்பேன்" என்று அடங்காப்பிடாரித் தனம செய்த ஜெயலலிதாவின் அட்டகாசம்

# மாணவர்கள் மண்டை உடைப்பு ஜெயலலிதா குண்டர்கள் ரவுடீசம்

## அப்பாவி மாணவர்களை பச்சை ரத்தம் சிந்தவைத்து ஜெயலலிதா வெறியாட்டம்

சென்னை, மார்ச் 31 மாணவர்கள் எதிர்ப்பையும் மீறி ஜெயலலிதா பச்சையப்பன் கல்லூரிக்குள் நுழைந்து தனது சிறு பிள்ளைத்தனமான விபரீத வெறி விளையாட்டால் விபரீதத்தை ஏற்படுத்தினார் எதிர்த்த மாணவர்களை குண்டர்களை அனுப்பித்தாக்கினார் பச்சையப்பன் கல்லூரியில் மாணவர்கள் ஜெயலலிதாவால் பச்சை ரத்தம் சிந்தும் கொடுமை நடந்தது

கல்லூரிவிழாவில் பேசினால் ஒருவேளை சமுதாயத்தில் ஒரு மதிப்பை பெற வாய்ப்பு ஏற்படலாம என்று கருதிய ஜெயலலிதா பல கல்லூரிகளுக்குத்தூது அனுப்பினார்

கல்லூரியில் பேச ஆசைப் படுகிறேன் என்று ஜெயலலிதா சொல்லி அனுப்பினார் ஒரு கல்லூரியிலும் கூப்பிட வில்லை.

ஜெயலலிதா டான்ஸ் ஆட வந்தால் பார்க்கிறோம் என்று கல்லூரி மாணவர்கள் சொல்லிவிட்டனா.

கடைசியில் பச்சையப்பன் கல்லூரியில் சிறிய விழா என்று கூறி தன் ஆட்களைப் பிடித்து ஏற்பாடு செய்தார். ஜெயலலிதா.

மாணவர்கள் இதை ஆரம்பத்திலேயே எதிர்த்தனா. கண்ட கண்ட ஆட்களெல்லாம் புனிதமான கல்விக் கோயிலுக்கு வரக் கூடாது ஆதரவாளர்கள் என்று மாணவர்கள் ஜெயலலிதாவுக்கு எதிர்ப்பு தெரிவித்தனர். ஜெயலலிதா அடம் பிடித்தார் எல்லை தாண்டி நுழைவேன் என்றார்.

புரட்சித்தலைவருக்கு துரோகம் இழைத்த ஜெயலலிதா பச்சையப்பன் கல்லூரியில் புரட்சித்தலைவரதுபடத்தை திறக்ககூடாது என்று மாணவா பட்டாளம் கொதித்து எழுந்தது

பச்சையப்பன் கல்லூரி பகுதியில் நேற்று பிற்பகலில் இருந்தே பதட்டநிலை உருவாகியது. உடனே கட்சிக்காரர்கள் என்ற போர்வையில் குண்டர் படையை ஜெயலலிதா ஆட்கள் உள்ளே அனுப்பினார்கள்.

புரட்சித்தலைவர்படத்தை ஜெயலலிதா திறக்கக்கூடாது கல்லூரிக்குள் நடக்கும் விழாவுக்கு ஜெயலலிதாவின் ஆதரவாளர்கள் என்ற பெயரில்குண்டர்களும் சண்டியர்களும் வரக் கூடாது என்று மாணவா பட்டாளம் கூறியது.

மாணவர்கள் கடும் எதிர்ப்பை தெரிவித்தும் ஜெயலலிதாவின் அடியாட்களும்குண்டர்களும் ரவுடிகளும் கல்லூரிக்குள் புகமுயற்சித்தனர்.

இதைத்தொடர்ந்து மாணவர்களுக்கும் ஜெயலலிதாவின் ரவுடிகளுக்கும் பயங்கர மோதல் ஏற்பட்டது. ஜெயலலிதாவுக்கு ஆதரவாக வரவழைக்கப்பட்ட ரவுடிகள் ஏறி வந்த காரை மாணவர்கள் கேரோ செய்து கல்லூரியின் உள்ளே விட மறுத்தனர்

இதன் தொடர்பாக நடந்த ரகளையில ஜெயலலிதா ஆதரவு குண்டர்கள் இரண்டு மாணவர்களது மண்டையைப்பிளந்து விட்டனர்.

இந்த மோதலைத் தொடர்ந்து இரும்புத்தொப்பி போலீசார் வரவழைக்கப்பட்டனர் துப்பாக்கி குண்டர்ந் தடிகளுடன் நூற்றுக் கணக்கான போலீசார் வரவழைக் கப்பட்டனர்

## பாவம் கோவைத்தம்பி

அந்தசமயத்தில் ஜெயலலிதா ஆதரவாளர்கோவை தம்பி ஒருகாரில் வந்தார் அதை மாணவர்கள் மறித்தனர் கேரோ செய்தனர்

மாணவர்களின் எதிர்ப்பை பார்த்ததும் கோவைத்தம்பி திரும்பிவிட்டார். இதற்கிடையில் ஜெயலலிதாவின் குண்டர்களுக்கும் மாணவர்களுக்கும் வெளியே பயங்கர மோதல் நடந்தது பதட்டநிலை உண்டானது. உள்ளே விழா மேடை முன்பு இருந்த திறந்த மைதானம் முழுவதும் காலியான நிலை மாணவர்கள் யாரும் அங்கு இல்லை

இந்த சமயத்தில் ஜெயலலிதாவின்குண்டர்கள் ஜெயலலிதாவைப்போலவே கொல்லைப் புற வழியைப் பயன் படுத்தினார்கள்.

மதுசூதனன் காமராசன் ஆகியோரையும் மாணவர்கள் உள்ளே விடவில்லை அவர்களும்

[2-ம் பக்கம் பார்க்க]

## உ.பி. மேலவை தேர்தல்

புதுடெல்லி, மார்ச் 31. உத்திரப்பிரதேசமேலவையில் காலியாகும் 13 இடங்களுக்கு தேர் தல் நடத்த தேர் தல் கமிஷன் உத்தரவிட்டுள்ளது. ஏப்ரல் 15 ம் தேதிவரை வேட்பு மனு தாக்கல் 16ம்தேதி பரிசீலனை. வேட்பு மனுக்களை திரும்ப பெறும் நாள்ஏப்ரல் 18. வாக்குப்பதிவு ஏப்ரல் 27 ம் தேதி நடைபெறும்.

## டென்மார்க் நாடாளுமன்றகுழு

சென்னை, மார்ச் 31 டென்மார்க்நாட்டு நாடாளுமன்றகுழு அதன்சபாநாயகாஸ் வெண்டு ஜாகோப்சேர் தலைமையில் சென்னை வந்துள்ளது. குழுவினர் சபாநாயகர் பி.எச். பாண்டியன் விமானநிலையத்தில்வரவேற்றார். அவர்களுக்கு சபாநாயகர் நேற்று விருந்தளித்தார். குழுவினர் மாமல்லபுரம் சென்று சிற்பங்களைபார்வையிட்டனர்.

இன்று மாலை
**சைதை**
தாடண்ட நகரில்
, விவசாயிகள்-
தொழிலாளர்கள்
கட்சி மாநாட்டில்
**ஆர். எம். வீ.**
**டாக்டர்**
**சிவாஜி கணேசன்**
**கி, வீரமணி**
ஆகியோர்
பேசுகிறார்கள்



# புரட்சி மலர்கள்

## அப்பனே வா! அடிமை வேலை செய்!

## டாக்டர் கா.காளிமுத்து

குணக்குன்றாகவும் கொள்கைக்குன்றாகவும் ஒரு காலத்தில தென்பட்ட நாவலர் நெடுஞ்செழியன் பெரிய அளவில் இருந்த குப்பைமேடு என்பதைக் கடைசியில நிரூபித்தே விட்டார்.

புரட்சித்தலைவர் மறைந்த உடனேயே அதுபற்றியே சிறிதளவு கூட துக்கமோ - துயரமோ இல்லாத 'கொடுஞ்'செழியன் உடனடியாகவே ''நானே முதல்வர்'' என்று அறிவித்தார்!

**சமுத்திரத்தை சவாலுக்கழைக்கும்ஒரு பேரியக்கத்தின் தலைவர் மறைந்தபின் கலந்துபேசி முடிவெடுக்க வேண்டும் என்ற புத்தி கடுகளவும் இல்லாமல் ''நானே முதல்வர்'' என்பது அகந்தை மட்டுமல்ல: முழு மூடத்தனமும் ஆகும்!**

எல்லோரும் கலந்துபேசி ஏற்புடைய முடிவை எடுக்கலாம் வாரீர் என்று அன்னை தோட்டத்துக்கு அழைத்தபோது - ''நானே முதல்வர்'' அதை வைத்து முடிவு செய்யுங்கள். என்று உதவியாளா மூலம் செய்தி அனுப்பியவர் **மரம்போல் வளர்ந்தும் மக்கட்பண்பற்ற இந்த நெடுஞ்செழியன்!**

இராமாவரம் தோட்டத்துக்கு எத்தனைமுறை பதவி ஆசையால் நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு ஓடிவந்திருக்கிறார் இந்த நெடுஞ்செழியன்!

புரட்சித்தலைவர் மறைந்த உடனேயே அவர் தோட்டம்-இல்லம் அவரது இல்லத்தரசி எல்லாமே அலட்சியமாகத் தெரிகின்றன

**நாவலர் நெடுஞ்செழியன் முதல்வராக வருவதை அன்னை ஜானகி எம் ஜி ஆரோ-ஆர் எம் வீயோ எதிர்க்கவில்லை.**

பண்ருட்டிக் குடிலனும் நச்சுப் பெண் ஜெயலலிதாவும் அவரை ஆதரித்தார்கள். என்று நம்பி நாங் கூழ்ப் புழுவுக்குள்ள அறிவு கூட இல்லாத இந்த நெட்டை மனிதர் நம்பி மோசம்போய் - அதிலிருந்து மீளாமல் - ஜெயலலிதா எனும் சாக்கடையில் ஜலக்கிரீடைசெய்துகொண்டிருக்கிறார்!

உண்மை தெரியாத **ஒதியமரமே** நெடுஞ்செழியனின் பெயர் கெடுக்க வந்த **நீசரே!** ஒரு உண்மையை புரிந்துகொள்ளும்!

நாங்கள் எல்லோரும் உம்முடைய பெயரை முதல்வர் பதவிக்கு முன்மொழிந்திருந்தால் ஜெயலலிதா கும்பல்-அதை ஒத்துக்கொண்டு துணைக்கு வந்திருக்கும் என்று முழுமூடத்தனமாய்க் கருதாதீர்! அப்போதும் அவர்கள் 'ஜெயலலிதா' பெயரை வைத்துக் கொண்டு-குறிப்பிட்ட சிலஎம்எல்ஏக்களுக்குப் பணம் தந்து அழைத்து கட்சியை உடைப்பதாகத்தான் முடிவு!

**அந்தப் பேரம்தான் ஏற்கனவே அவர்கள் டெல்லியோடு முடித்து விட்ட ஒன்று!**

ஆனால் தோட்டத்துக்கு அழைத்த பின்னும் வர மறுத்த உம்மைச் சரியான 'ஆட்டக் காயாக'ப் பயன்படுத்தி ஒரு வழியாக உமது முகத்தில் சாணத்தைப் பூசிவிட்டார்கள்!

'தோட்டம்' என்றால் உமக்கு அவ்வளவு புளிக்கிறதோ! போயஸ்கார்டன் என்றால் உச்சிமரத்திலிருந்து ஒழுகும் தேனாகத் தித்திக்கிறதோ!

**நன்றி கெட்டவரே!**

**புரட்சித் தலைவர் 'தி மு கவி லிருந்துவிலக்கப்பட்டதற்கே முதற்பெரும் காரணம் நீர்!**

சேப்பாக்கம் விருந்தினர் விடுதியில எல்லோரும பேசிக கொண்டிருக்கும்போதே-கலைஞரிடமும் கேட்காமல் வெளியே வந்து நிருபர்களிடம் எம் ஜி ஆரை விலக்கியதாக அறிவித்தவர் நீர்!

**மறுநாள் கலைஞர் வீட்டில்-ஆர் எம் வீ வந்து இருவரும் தனியாகப் பேசி விட்டு இருவரும் கண் கலங்கியபடியேவெளியே வந்தனர்! முடிவை மாற்றலாமா என்று கலைஞர் தலை குனிந்தபடியே பென்சிலால் கோடு கிழித்துக் கொண்டே யோசித்துக் கொண்டிருந்த போது-முடிவை மாற்றக் கூடாது என்றுகலைஞரைச்சிந்திக்கவே விட மறுத்தவர்கள் சிலர்! சண்டாளரே! அதில் நீரும் ஒருவர்!**

**அன்று உடனிருந்து இரத்தக்கண்ணீர் வடித்தவர்களில் நாஞ்சிலாரும்ஒருவர்! இந்தக் கட்டுரையை எழுதுபவனும் ஒருவன்!**

**நீர்விலக்கிய எம் ஜி ஆரிடம்-நீரே அரசியல் அடைக்கலமாகி கட்சிப் பொதுச் செயலாளராகி-அவர் இறக்கும் காலம்வரை-முக்கியப் பொறுப்புக்களை உள்ளடக்கிய 2 ஆம் இடத்து மந்திரியாக இருந்தவரே! கேடு கெட்டவரே! அதற்கும் மேலாக முதல் மந்திரிப் பதவி உமக்கு ஒரு கேடா?**

ஆட்சியை அதிகாரத்தைப் பயன்படுத்தி உமது குடும்பத்துக்கு எதுவும சமபாதித்ததில்லையோ - மனச்சாட்சியிருந்தால பதில் சொல்லும்! வேண்டியவர்க்குச் சலுகை காட்டிக் கையெழுத்துப் போட்ட எத்தனை பைல்கள் புரட்சித்தலைவரால் மாற்றப்பட்டன.

புரட்சித்தலைவர் மறைந்து அவர் உடல் ராஜாஜி ஹாலில் கிடத்தப்பட்டிருக்கிறது. உள்ளே நுழைய முடியாமல் 10, 15 எம் எல். ஏக்கள் வெளியே தவிக்கிறார்கள். காவல் துறை அதிகாரி ஒருவர் - அவர்களை அடையாளம் தெரியாமல் உள்ளே விடமறுக்கிறார்'

தற்காலிக முதல்வர் நெடுஞ்செழியனார் அப்போது வருகிறார் எம் எல் ஏக்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு உள்ளே அனுப்புமாறு கெஞ்சுகிறார்கள்; **'அட இருங்களய்யா'** என்றுசொல்லி விட்டு நெடுஞ்செழியனார் கம்பீர நடை நடந்து உள்ளே போகிறார்

**அந்த எம் எல் ஏக்களெல்லாம் மனதார உம்மை முதல்வராக்க விரும்புவார்களோ?**

அன்னை ஜானகி எம்ஜிஆரை பற்றிப் பேசத்தகாத வார்த்தைகளைப் பேசுகிறவரே! உமது குடும்பம்-ஒழுக்கத்தில் பழுத்த குடும்பமோ?

**நீர் எந்த ஏழைக்கும் நன்மை செய்ததில்லை எந்த எம் எல் ஏ தொகுதிக்காக எது கேட்டாலும் உம்மிடம் நடக்காது!**

எப்படி எம்எல்ஏக்கள் ஓட்டுப்போடுவார்கள் உம்மை முதல்வராக்க உம்முடைய முதல்வர் பதவி ஆசைக்கு முட்டுக்கட்டையாக அன்னை ஜானகி எம்ஜி ஆரோ ஆர் எம் வீயோ காரணமென்று கருதிக் கததுகிறீர்- கூவுகிறீர் குரைக்கிறீர்!

**எம் எல் ஏக்கள் உம்மை விரும்பவில்லை! கட்சித் தொண்டர்கள் உம் பெயரைச் சொன்னாலே- காரமிளகாயைக் கடித்தது போல் எரிச்சலடைகிறார்கள்!**

கடைசியில் எல்லோரும் சேர்ந்து வற்புறுத்திய பின் தான் அன்னை ஜானகி முதல்வர் பொறுப்பேற்க முன்வந்தார்!

**மேடையில் பேசும்துணிவு இல்லாவிட்டாலும் வந்து போனவர்களிடமெல்லாம் ஜெயலலிதாவைப் பரத்தை, கணிகை, பலர் கைப்பட்ட பாவை ஒழுக்கக் கேடானவர் குடி கேடி என்றெல்லாம் நீர்பேசவில்லையா? அவர் இப்போது உமது 'மகள்' மகளை வைத்தே அப்பன் புத்தியை எடை போடலாம்**

**அன்னை ஜானகி எம் ஜி ஆரைப் பற்றித் தனிப்பட்ட முறையில அந்த வீட்டில் தின்ற சோற்றுக்குக்கூடநன்றியில்லாமல் நாகூசாமல் ஏசத்தொடங்கியிருக்கிறீர்!**

**என்னை - என் குடும்பத்தைப் பழித்தீர்! என்ன இருந்தாலும் 'நீர் பெரியவர்' எனத்தாங்கிக் கொண்டேன்!**

**என்தாயை ஏசுகிறீர்! உம் குடும்பத்தைக் கிண்டிக் கிளறினால் உம் குடும்பத்து இரகசியங்களை எல்லாம் எழுத வேண்டிவரும்! பேச வேண்டி வரும்! எச்சரிக்கிறேன்! புரிந்து கொண்டு அடங்கிவிடும்.**

**'தம்பீவா! தலைமைஏற்க வா' என்று அண்ணா அழைத்தார் அன்று!**

**அப்பனேவா அடிமை வேலை செய்! என்று வஞ்ச மகள் நஞ்சமகள் ஜெயலலிதா அழைக்கிறார் அடிமைப் பிண்டமே நாவை அடக்குர்!**

# ஜெயலலிதா குண்டர்கள் வெறியாட்டம்...

(1-ம் பககதொடர்ச்சி

லெட்டர்பேடுகள் காகிதங்கள்பேப்பாகள்தஸ்தாவேஜுகள் எரிந்துசாம்பலாயின.

மின்சாரபல்புகள்உடைந்து நொறுங்கி சிதறின. சோடா பாட்டில்களில் பெட்ரோலை நிரப்பி சரமாரியாக வீசிதீப்பந்தம்வீசப்பட்டதால் தீ எங்கும் பரவியது.

### மனைவி- மகன் உயிர் தப்பிய அதிசயம்

இக்கொடிய வன்முறைத் தாக்குதலும் தீப்பந்த வீச்சும் நடந்தபோது நல்ல வேளையாக துரைசாமி வீட்டில் இல்லைவீட்டில் துரைசாமி இருந்திருந்தால் அவர் படுகொலை செய்யப்பட்டிருப்பார்.

சம்பவம் நடந்த போது துரைசாமியின் வீட்டில் அவரது தந்தையார் சாமியப்ப கவுண்டரும் துரைசாமியின் மனைவி மல்லிகா, ஒரே மகன்வெற்றியாகுவும் துரைசாமியின் உதவியாளர்கள் வெங்கடேசன் ராஜப்பா ஆனந்தன் ஆகியோரும் வீட்டில் இருந்தனர்.

### பயங்கரம்

துரைசாமியின் தந்தையார் மீது பெட்ரோல் நிரப்பப்பட்ட சோடாபாட்டிலை வீசிஅவர்மீதும் தீப்பந்தத்தை வீசினார்கள். ஆனால் அவா அதிர்ஷ்டசமாகத் தப்பினார் தாக்குதலில் அவருக்கு ஊமைக் காயங்கள் ஏற்பட்டன.

### தப்பியது எப்படி?

திமுக அமைப்புச்செயலாளர் நீல நாராயணனின் வீடு துரைசாமி வீட்டிற்கு பக்கத்தில் இருக்கிறது வன்முறைச் சம்பவங்கள் நடப்பதையும் துரைசாமியின் மனைவி குழந்தை உறவினர்கள் உதவியாளர்கள் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டிருப்பதையும் உணர்ந்து நீலநாராயணன் வீட்டிலிருப்பவர்கள் காப்பாற்ற முயற்சித்தார்கள்.

இரு வீடுகளுக்குமிடையில் இருந்த கட்டிகளைப் பிரித்து அனைவரையும் காப்பாற்றியதே நீலநாராயணன் குடும்பத்தினரே?

### ஸ்கூட்டர் வாகனங்கள் நாசம்

141வது வட்டத்தைச் சேர்ந்த மடுவங்கரை மோகனின் ஸ்கூட்டர் துரைசாமியின் வீட்டு வாசலில் நின்றது அதை அரிவாள் கத்தி சோடாபுட்டிகளால் அடித்து வெட்டி சர்வநாசம் செய்தது இந்த வன்முறைக் கூட்டம்.

வீட்டு வாசலில் இருந்த சைக்கிள், ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள் போன்ற வாகனங்கள் இதனால் சேதமாயின.

### பதட்ட நிலை

இச்சம்பவத்தால்சென்னை நகரில் குறிப்பாக சைதைப் பகுதியில் பதட்ட நிலை நிலவுகிறது

இச்சம்பவம் காட்டுத் தீ போல சைதைப்பகுதி முழுவதும்பரவியது பொதுமக்கள் குறிப்பாகத் தாய்மார்கள் சைதை துரைசாமி வீட்டின் முன்பு கூடினார்கள் அனைவரும் துரைசாமிக்கு ஆறுதல் கூறினார்கள்

தாய்மார்கள் கண்ணீர் விட்டுக் கதறினார்கள். சைதை துரைசாமி அனைவருக்கும் ஆறுதலும் தேறுதலும் கூறினார்.

சைதைதுரைசாமிசம்பவம் நடந்தபோது எம். ஜி. ஆர் நகரில் ஆர். எம். வீயுடன் இருந்தார் தகவல் தெரித்ததும் சைதை துரைசாமி வீட்டிற்கு விரைந்தார்.

இப்படிஒருசம்பவம்நடக்குமென்று கருதி ஆர் கேமரன் காலனி காவல் நிலையத்தில் மதியமே சைதை துரைசாமி புகார் கொடுத்தும் நடவடிக்கை எதுவும் எடுக்கப்படவில்லை.

### தலைவர்கள் விரைந்தனர்

சம்பவத்தைக் கேள்விப்பட்டதும் ஆர். எம். வீ. உள்ளம் பதைத்தபடி துரைசாமி வீட்டிற்கு விரைந்தார் சர்வநாசம்அடைந்தவீட்டை பார்த்து வேதனையுற்றார் துரைசாமியின் தந்தையாருக்கும் துரைசாமியின்மனைவிக்கும் ஆறுதல் கூறினார்.

இன்று காலை கழகப் பொதுச் செயலாளர் (பொறுப்பு) எஸ். இராகவானந்தம் பொருளாளர் மாதவன், ஜேப்பியார், மயிலை தமிழ்மணி, எல்லாராஜமாணிக்கம். டி.கே.கபாலி.வி.ராஜ்குமார் வழக்கறிஞர்கற்பகவிநாயகம் வழக்கறிஞர்பாலசுப்பிரமணியம் சிவாஜி கட்சியைச் சேர்ந்த கொண்டல் தாசன் மயிலை மணி விநாயகம் மற்றும் ஏராளமானவர்களும் உள்ளம் பதைக்க, சைதை துரைசாமி வீட்டிற்கு வந்து துரைசாமிக்கு ஆறுதல் கூறினார்கள்.

தமிழகத்தில் குடியரசுத் தலைவர் ஆட்சி நடக்கிறது. ஆளுநா ஆட்சியை கவனிக்கிறார்.

ஒருதுரைசாமியைக் கொல்லலாம் ஆனால் கழகத்தைக் காக்க ஓராயிரம் துரைசாமி தோன்றுவார்கள் என்று தம்மைச்சந்திக்க வந்த மக்களிடம் துரைசாமி கூறினார்.

முன்னாள் அமைச்சர் திருநாவுக்கரசு படுபயங்கரமாக கொலை வெறியைத் தூண்டி விட்டு பேசியிருக்கிறார்.

புதுக்கோட்டையில் பேசிய திருநாவுக்கரசு 'நான்நினைத்தால் ஆர். எம். வீரப்பன் உயிருடன் திரும்பமுடியாது'' என்று கூறினார்.

அதே திருநாவுக்கரசு திருவையாற்றிலும் ''ஆர்.எம்,வீ. உயிரோடு திரும்ப முடியாது என்று பகிரங்கமாகப்பேசினார் இது பற்றி ஆளுநரிடம் கழக எம.பி.க்கள் புகார் மனு கொடுத்தனர்.

எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

ராமாவரம் தோட்டத்துக்குள் நுழைவோம் என்று ஜெயலலிதாவை வைத்துக் கொண்டு அவரது ஆட்கள் பேசினர் எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை

மார்ச் 15ந்தேதி பந்த் நடந்த போது போலீஸ் வேனில் சென்ற நிருபர்களை காங்கிரஸ் மற்றும் ஜெயலலிதா ஆதரவு குண்டர்கள் அடித்தனர். கொலை செய்யமுயன்றனர்.

இதுபற்றி கொலைமுயற்சி வழக்கு[307இ. பி. கோ] பதிவு செய்திருப்பதாக போலீசார் கூறினர். ஆனால் கைது செய்யப்பட்ட குண்டர்கள் மாலையிலேயே விடப்பட்டனர்.

அருப்புக் கோட்டையில் கழகத்தோழர் ரஞ்சிதத்தை ஜெயலலிதா குண்டர்கள் கொலை செய்தனர்,

சட்ட மன்றத்தில் இதே ஜெயலலிதா கும்பலும் காங்கிரசும் செய்தகலாட்டாவுக்கு அன்னையா ஆட்சியைக் கலைத்து ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வந்தனா

இப்போது ஜெயலலிதா கும்பலும் காங்கிரசும் செய்யும் கலாட்டாவுக்கு ஜனாதிபதி ஆட்சியை கலைத்து எமாஜன்சியுடன்சர்வாதிகார ஆட்சி கொண்டு வரப்படுமா என்று மக்கள் மத்தியில் கேள்வி எழுந்துள்ளது.

# மாணவர்கள் மண்டை உடைப்பு

(முதற்பக்க தொடர்ச்சி)

கொல்லைப்புறம் வழியாக உள்ளே நுழைந்தனர் அறுபது குண்டாகளும் கொல்லைப்புறம் வழியாக கல்லூரிக்குள் நுழைந்து விட்டனர்.

### உள்ளே வந்த ரவுடிகள்

அரசியல்வாதி போலவேடமிட்டுக் கொண்டு உள்ளே வந்த இந்த ரவுடிகள் மாணவர்களைப் பாய்ந்து பாய்ந்து தாக்கினர் அவ்வப்போது கோஷமிட்டனர்.

மாணவர்கள் அவர்களைக் கண்டு கொந்தளித்து கூச்சலிட்டனர்.

உள்ளேவந்த சண்டியர்கள் இன்னும் வெளியே இருந்த குண்டர்களை உள்ளே கொண்டு வர போலீஸ் தயவை நாடினர்-

மாணவர்களை நோக்கி ஜெயலலிதாவின் குண்டர்களும கற்களை வீசினர்.

இதில் இரண்டு மாணவர்கள் மண்டையில் அடிபட்டு இரத்தம் கொட்டியது.

### முதல்வரின் முயற்சி

இதற்கிடையில் கல்லூரி முதல்வர் நாகலிங்கம் வந்து குண்டர்களை துரத்தி அமைதி ஏற்படுத்த முயன்றார்.

45 நிமிடம் சமாதானப் பேச்சுவார்த்தை நடந்தது. புரட்சித்தலைவர் படத்தை குண்டர்களை ஏவி எங்களை அடித்து மண்டையை உடைத்த ஜெயலலிதா திறக்கக்கூடாது என்று மாணவர்கள் கூறினர் அது ஏற்கப்பட்டது ஒரு நல்ல தலைவரின் படத்தை மோசமான நடத்தை கெட்ட பெண் திறப்பதை ஏற்க முடியாது என்று மாணவர்கள் கூறினார்கள்.

சமாதானப் பேச்சு வார்த்தை நடந்து கொண்டு இருந்தபோது ஜெயலலிதா ஆதரவாளர்களது காலிகள் சர்சர........ என்று பறந்தன.

பிறகு போலீஸ் புடைசூழ பாதுகாப்புடன் வந்த ஜெயலலிதா போலீசார் துணையோடு விழாவை துவக்கினார்.

புரட்சித்தலைவர்படத்தை திறக்க பலவறுபல சந்தர்ப்பங்கள் இருக்கின்றன ஆகவே படத்திறப்பு இன்று வேண்டாம் என்று கல்லூரி முதல்வர் பேசும் போது ஜெயலலிதாவைக் கேட்டுக் கொண்டார்.

ஜெயலலிதா பிறகு பேசினார். தனது அசிங்க அரசியலை எல்லாம் பேச முற்பட்டு முழு அரசியல் மேடையாக ஆக்கி விட்டார் ஜெயலலிதா அவ்வப்போது இதற்கு எதிர்ப்பு எழுந்தது

பேசியபடி இருந்த ஜெயலலிதா திடீரென்று புரட்சித் தலைவரது படத்தை திறந்து வைத்து விட்டார். மீண்டும் இதைத்தொடர்ந்து மோதல் ஏற்பட்டது.

வரலாற்றுப் புகழ் பெற்ற பச்சையப்பன் கல்லூரிக்கு பேரறிஞர் அண்ணா படித்த பச்சையப்பன் கல்லூரிக்கு பெருத்த இழுக்கை ஜெயலலிதா தேடித் தந்துவிட்டார் என்று மாணவர்கள் கூறினர்.

பச்சையப்பன் கல்லூரியில் மாணவர்களின் பச்சை ரத்தத்தைப் பருகி விட்டார் ஜெயலலிதா

ஏப்ரல் சனிக்கிழமை

**இதயதெய்வம் புரட்சித்தலைவர் துயிலுமிடத்தை தூய்மைப் படுத்து-ஆளுநர்மாளிகைநோக்கி50ஆயிரம்சைக்கிள் பேரணி**

- ஏழைகளை வாட்டுகிறது மத்திய பட்ஜெட்
- நெசவாளர் பிரச்சினைகளை உடனே தீர்ப்பீர்
- வேது குழந்தைப் பேறுகால விடுப்பை ரத்து செய்வதா?
- வேலை இழந்த தொழிலாளர்கள் வாடுகின்றனர்

மூடிய ஆலைகளைத் திறக்காவிட்டால்

# போராட்டம் வெடிக்கும்

## அண்ணா பேரவை செயற்குழு தீர்மானங்கள் முழுவிவரம்

சென்னை, மார்ச். 31- மூடிய ஆலைகளைத் திறந்து தொழிலாளர்களின் துயரை துடைக்காவிட்டால் போராட்டம் வெடிக்கும் என்று அண்ணா தொழிற்சங்கப் பேரவை செயற்குழு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

அண்ணா தொழிற்சங்கப் பேரவைத்தலைவர் யூ. ஆர். கிருஷ்ணன் தலைமையிலும், கழகத் தொழிலாளர் அணிச் செயலாளர் வை. பெருமாள் முன்னிலையிலும் அண்ணா தொழிற்சங்கப் பேரவை செயற்குழு கூடியது.

திராவிட இயக்கத்தொழிற் சங்கத் தந்தை எஸ். இராகவானந்தம் இச்செயற்குழுகூட்டத்தைத் துவக்கி வைத்தார்.

கழகத்தலைவரும் புரட்சித் தலைவரின் ஒரேவாரிசுமான அன்னை ஜானகி எம்.ஜி.ஆர் இதில்கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்கள்.

இச்செயற்குழு கூட்டத்தில் அமைப்புச் செயலாளர் டாக்டர் சத்தியவாணிமுத்துவும் கழக கொள்கை பரப்புச் செயலாளர் சு முத்துசாமியும் தலைமை நிலையச் செயலாளர் ஆனூர் ஜெகதீசனும் திருமதி சுலோசனா சம்பத்தும் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்

பேரவை நிர்வாகிகளும் மாவட்ட தொழிற்சங்க செயலாளர்களும், மற்றும் நிர்வாகிகளும், இணைப்புச் சங்கங்களைச் சேர்ந்த சிறப்பு அழைப்பாளர்களும் இதில் கலந்து கொண்டனர்.

### பாராட்டு நன்றி

செயற்குழுக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் வருமாறு:

மார்ச் 15-ல் நடைபெற்ற பாரத் பந்தில் கலந்து கொண்ட பொதுமக்களுக்கும் தொழிற் சங்கங்களுக்கும் தொழிலாளர்களுக்கும் மற்றும் கட்சிகளுக்கும் பாராட்டும் நன்றியும் தெரிவிக்கப்பட்டது.

ரூபாய் 5 ஆயிரம்கோடிக்கு மத்திய பட்ஜெட்டில் வரி சுமத்தப்பட்டுள்ளது. இது கண்டிக்கத்தக்கது. விலை உயர்வுக்கு வழிகோலும் பட்ஜெட் இது.

### உடனே திறந்திடுக

தமிழகத்தில் மூடிக்கிடக்கும் பஞ்சாலைகள், மற்றும் என் ஜி ஈ பரிங் ஆலைகளை உடனே திறந்து தொழிலாளர்களின் பட்டினியைத் துடைக்க வேண்டும் தொடர்ந்து தொழிலாளர்களின் கோரிக்கைகள் நிராகரிக்கப்பட்டால் போராட்டம்நடத்த வேண்டும், என்று செயற்குழு தீர்மானிக்கிறது.

அன்னை ஜானகி எம்ஜிஆர் ஆட்சி மீண்டும் அமைந்த உடன் எடுக்க இருக்கும் முக்கிய முடிவுகளில் மூடிய ஆலைகளைத் திறப்பதுதான் முதலிடம் பெறும் என்று அறிவித்ததற்கு- இச்செயற்குழு தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

### நெசவாளர் பிரச்சினை

நெசவாளர்களுக்கு மலிவு விலையில் மூலப் பொருட்களை வழங்க வேண்டும் நெசவாளர் பிரச்சினை தீர்க்கப்படா விடில்போராட்டம் நடத்த வேண்டி வரும்.

பெண் ஊழியர்க்கு மகப் பேறு விடுப்பு, 2 குழந்தை பெறும் வரையிலும்தான் என்று விடுப்பை குறைக்க முயலும் மத்திய அரசின் போக்கை செயற்குழுகண்டிக்கிறது.

### ஆட்சிகலைப்புக்கு கண்டனம்

அன்னையார் தலைமையிலான புரட்சித்தலைவா அரசை மத்திய அரசு கலைத்தது குறித்து இச்செயற்குழு கண்டிக்கிறது.

மக்கள்நம்பிக்கையை இழந்துவிட்டராஜீவ்சட்டசபைக்கும் நாடாளுமன்றத்துக்கும் உடனே தேர்தலை நடத்த வேண்டும்.

அன்னை ஜானகி எம்ஜிஆர் ஆட்சி மீண்டும் ஏற்பட அயராது உழைக்க இச் செயற்குழு சபதம் ஏற்கிறது

புரட்சித்தலைவர்கொண்டு வந்த சத்துணவுதிட்டத்திற்கு எம் ஜி ஆர்சத்துணவு திட்டம் என்று பெயரிட வேண்டும்.

### பொதுத்துறை ஊழியர் பிரச்சினை

மத்திய அரசு பொதுத் துறை ஊழியர்கள் மீது எடுக்கும் பழி வாங்கும் நடவடிக்கைகளைக் கைவிட வேண்டும்.

நிறுத்தி வைக்கப்பட்டுள்ள சலவைத் தொழிலாளா பொருளாதார மேம்பாட்டு வாரியத்தை உடனே செயல் படுத்த வேண்டும்.

### ஈழத் தமிழர் பிரச்சினை

விடுதலைப் புலிகளை அழைத்துபேச்சுநடத்தி ஈழத் தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டும்என்று மத்திய அரசை செயற்குழு கேட்டுக் கொள்கிறது.

அண்ணா தொழிற்சங்கப் பேரவை அன்னை ஜானகி எம் ஜி ஆர் தலைமையில் சிறப்பாகச் செயல்படுகிறது. இந்த நிலையில் அண்ணா தொழிற்சங்கப் பேரவையின் பெயரை சிலர் தவறாகப் பயன்படுத்தி வருகிறார்கள் இந்நிலை நீடித்தால் சம்பந்தப்பட்டவர்கள் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கப் படும்.

தனியார் துறையிலுள்ள பெரும் தொழில்களையெல்லாம் நாட்டுடைமை ஆக்க வேண்டும் என்று தொழிலாளர்களால் நீண்ட காலமாக வலியுறுத்தப்பட்டு வருகிறது. தொழிலாளர்களின் உணர்வுகளுக்கு விரோதமாக பொதுத்துறையிலுள்ள நிறுவனங்களையே தனியார் துறைக்கு தாரை வார்க்கும் முயற்சியில்மத்திய அரசுஈடுபட்டு வருகிறது மத்திய அரசின் இந்தப்போக்கை செயற்குழு வன்மையாகக் கண்டிக்கிறது, சத்துணவுபணியாளர்களின் பணி நிரந்தரமாக்கப்பட வேண்டும் என்ற தீர்மானங்களும் மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### திருமணம்

சென்னை, மார்ச். 31-

சென்னை தாடண்டர் நகரைச்சேர்ந்த எஸ். அசன் முகமதுவின் மகள் மும்தாஜ் பேகத்திற்கும், முகமது நயினார் மகன் சலீம்கானுக்கும் வரும் 4ந்தேதி மாலை 6 மணிக்கு ராயபுரம் மார்க்கெட் அருகிலுள்ள ராசி மகாலில் திருமணம் நடைபெறுகிறது.

இந்த மணவிழாவில் உறவினர்கள், நண்பர்கள் பங்கேற்று வாழ்த்துகின்றனர்.

# காங்கிரசோடு உறவு இனி இல்லவே இல்லை: முத்துசாமி உறுதி

சென்னை, மார்ச் 31- காங்கிரஸ், தி.மு கவுடன் உறவு என்பது இனி எக்காலத்திலும் இல்லை என்று கழக கொள்கை பரப்புச் செயலாளர் முத்துசாமி உறுதியுடன் கூறினார்.

சென்னை ராயப்பேட்டை ராமாராவ் கார்டனில் நேற்று இரவு கழகப் பொதுக் கூட்டம்நடைபெற்றதுஇந்தக் கூட்டத்திற்கு த. ராதா தலைமை வகித்தார். கே. பன்னீர் செல்வம், இ. நடராசன் ஆகியோர் முன்னிலை வகித்தனர். ராஜி அனைவரையும் வரவேற்றார்.

இந்தக் கூட்டத்தில் முன்னாள் குடிசை மாற்று வாரிய தலைவர் என். வி. என். செல்வம், வண்ணை கோவிந்தன், குண்டு கல்யாணம் மண்ணடி கிருஷ்ணமூர்த்திஎட்டியப்பன் 102வது வட்ட செயலாளர் ராஜேந்திரன் சரசம்மாள் பு.எம்.

பாண்டியன் ஆகியோர் பேசினர்.

திருவல்லிக்கேணி பகுதிக் கழக இணைச் செயலாளர் ராஜ்குமார் திருவல்லிக்கேணி தொகுதி மகளிர் அணிச் செயலாளர் சுந்தரிசாமிநாதன், 98 வது வட்ட செயலாளர் ஜனி வாசன், ஜி. கோதண்டம் ஆர். ராமு, கே. ராஜி. சண்முகம், ஜனார்த்தனம், பல்லவன் ராஜி ஆகியோர் இதில் பங்கேற்றனர்.

மயிலை பகுதி கழக செயலாளர் எம், கே. பாலன் துணைச் செயலாளர் ஜெகன் ஆகியோரும்கூட்டத் திற்கு வந்திருந்தனர்.

இந்தக் கூட்டத்தில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் முத்துசாமி பேசுகையில் கூறியதாவது:-

இதய தெய்வம் புரட்சித் தலைவர் மறைவின் போது உலகமே அழுதது தாய்மார்கள்வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறி அழுதனர். ஆனால் ஜெயலலிதாஒருவர் மட்டும் அதுபற்றி எந்தச் சலனமும் இன்றி வஞ்சகவலை பின்னுவதிலேயே கருத்தாயிருந்தார் என்று குறிப்பிட்டார்

தேர்தலில் கழகம் தனித்துத்தான் போட்டியிடும் என்று குறிப்பிட்ட கழக கொள்கை பரப்புச் செயலாளர் முத்துசாமி திமுக காங்கிரசுடன் உறவு என்பது எந்தக் காலத்திலும் இல்லை என்று உறுதியிட்டுக் கூறினார் கழகத்தை சுக்கு நூறாக உடைக்க நினைத்த காங்கிரஸ் இன்று சுக்கு நூறாக உடைந்துள்ளது என்றும் முத்துசாமி குறிப்பிட்டார்

## கழக செய்திகள்

### கும்பகோணம்

கும்பகோணம், மார்ச். 31-

அன்னை ஜானகி எம். ஜி. ஆர். ஆட்சியைக் கலைத்த மத்திய அரசினைக்கண்டித்து கழகப் பொதுக்கூட்டம் குடந்தை நாகேஸ்வரன் கோவில் தெற்குவீதியில்பழக்கடை மூர்த்தி தலைமையில் நடந்தது.

முகமது அலி, ஏ. பாக்கியம், எம். ஆதிமூலம், பால்தம்பு ராஜ் பி. கணபதி, தம்பி. மார்த் தாண்டன், குணா, சி. ராஜாங்கம், எஸ் பெரியய்யா ஆகியோர் முன்னிலை வகிக்க மார்க்கெட் பி ராஜசேகரன் வரவேற்புரை ஆற்றினார்.

கூட்டத்தில் பி.கஸ்பார், குடந்தைஅமுதன், திருநாகேஸ்வாம்ஜலீல், குடந்தை அயூப்கான், கற்பகம்சாமி ஆகியோர் பேசினா, சோழபுரம் அறிவழகன் அனுகுண்டு பரமசிவம் ஆகியோர் சிறப்புரை யாற்றினர். இரத்தின ராஜேந்திரன் நன்றிகூறினார்

### பள்ளிபாளையம்

பள்ளிபாளையம் மார்ச், 31

பள்ளிபாளையத்தில் கழக பொதுக்கூட்டம் நடைபெற்றது.

இந்தக்கூட்டத்தில்ஒன்றிய தலைவர் துரைசாமி, நகர செயலாளர் சுப்பிரமணி, புலவர் இராம வரதராஜன், கழிஞ்சூர் செல்வராஜ், பாக்ய ராஜ் மன்றத்தை சேர்ந்த வாசுதேவன், வெள்ளியங்கிரி ஆகியோர் பேசினர்.

### புதுகை கழக செயல் வீரர்: கூட்டம்

புதுக்கோட்டை, மார்ச். 31

புதுக்கோட்டை ஒன்றிய கழக செயல் வீரர்கள் கூட்டம் ஆதனக்கோட்டைப் பயணியா விடுதியில் நடைபெற்றது மு.குமார் தலைமையில் நடைபெற்ற இந்த கூட்டத்தில் ஒன்றியகழகப்பொருளாளர் எம் காளிமுத்து வரவேற்புரை நிகழ்த்தினார்

கூட்டத்தில் மாவட்ட கழக இணைச்செயலாளர்வி ஓ எஸ் பன்னீர் செல்வம் ஆலங்குடி தொகுதி முன்னாள் சட்ட மன்ற உறுப்பினா அ வெங்கடாசலம் மாவட்ட எம் ஜி ஆர் மன்ற பொருளாளர் அச்சகம் ராஜகோபால் மாவட்ட எம்.ஜி.ஆர். மன்ற துணைத் தலைவர் காசிமுத்து மாணிக்கம் நகர்மன்றதுணை தலைவர் எம். ஜாபர்அலி ஒன்றிய எம். ஜி. ஆர் இளைஞரணித் துணைத் தலைவர் ராம சிதம்பரம் ஒன்றிய எம். ஜி. ஆர். இளைஞர் அணி துணைசெயலாளர் கே. ராஜேந்திரன் ஊராட்சி மன்றத் தலைவர்கள் ரா.கோ. ராஜன். வி. கலியமுத்து கே. சின்னய்யா. பி. காந்தி எ.கோவிந்தராசு, எஸ்.சிதம்பரம். சி. ராமச்சந்திரன், ஒன்றியகழக உறுப்பினர்கள் ராம. கனகராஜன், சின்னக் கண்ணு. மாவட்ட பிரதிநிதிகள் டி. கருப்பையா, எஸ். ராமசாமி, எஸ். என், ஜக்கேரியா, மற்றும் பலர் கலந்து கொண்டு விளக்க உரையாற்றினார்கள்

கூட்ட இறுதியில் ஒன்றிய கழக செயலாளர் கே.ரங்கசாமி நன்றி தெரிவித்துப்பேசினார் அன்னையார் தலைமையில் இதயதெய்வம் லட்சியங்களை நிறைவேற்ற முடிவு மேற்கொள்ளப்பட்டது.

### தூத்துக்குடியில் கழகத்தவர் தீவிரபணி

தூத்துக்குடி, மார்ச் 31-

தூத்துக்குடி நகரத்தில் 4,6,7:8 9. 10, 23,32 33 35,36, ஆகிய வார்டுகளுக்கு நகர அவைதலைவர் எஸ்.எம் புகார் நகரசெயலாளர்இரா. ஹென்றி நகர துணைச் செயலாளா சித்திரவிஜயன் மாவட்ட பிரதிநிதி கே. வி. நெடுங்கிள்ளி, தூத்துக்குடி தொழிற்சங்க தலைவர் இரா கிருஷ்ணன் ஆகியோர்சென்று உறுப்பினர்கள் கூட்டம் நடத்தினர்.

கூட்டத்தில் கட்சி வளர்ச்சிப்பணி- உறுப்பினர்கள் சேர்த்தல் என்பதைப்பற்றி நகரச்செயலாளா இரா. ஹென்றி விளக்கிப் பேசினார் அன்னை ஜானகி எம் ஜி ஆரை மீண்டும் ஆட்சியில் அமர்த்தும் வரை ஓய்வின்றி பணியாற்ற உறுதி மேற்கொள்ளப்பட்டது.

### தூத்துக்குடி

தூத்துக்குடி, மார்ச். 31

தூத்துக்குடி ஒன்றியம் கோயில் பிள்ளை விளையில் கழகக் கொடி ஏற்று விழா நடைபெற்றது.

மாவட்ட கழகசெயலாளா மு.பால கிருஷ்ணன் கழகக் கொடியை ஏற்றி வைத்து சிறப்புரை ஆற்றினார மற்றும் இரா.கிருட்டிணன், மாவட்ட மகளிர் பிரிவு செயலாளர் ராமலெட்சுமி அம்மாள் மாவட்ட மாணவர்பிரிவுதுணை செயலாளர் ஜெபமாலை ஆகியோர பேசினார்கள். மற்றும் மீளவிட்டான் தங்கத்துரை, ஏ. சின்னத் தம்பி, அஸ்தர மணி, உடையார், அந்தோணியம்மாள், கோமதியம்மாள் ஆகியோர் பங்கேற்று விழாவை சிறப்பித்தனா.

# அடுத்த பட்ஜெட்டை ஜானகி எம்.ஜி.ஆர் தாக்கல் செய்வார்

## ஏ சி சண்முகம் பேச்சு

புதுடெல்லி, மார்ச் 31- தமிழகத்தின் அடுத்த பட்ஜெட்டை அன்னை ஜானகி எம்ஜி.ஆர். தாக்கல்செய்வார்என்று நாடாளுமன்றத்தில் கழக எம்,பி ஏ,சி, சண்முகம் கூறினார்,

நாடாளுமன்றத்தில்தமிழக பட்ஜெட் தாக்கல் செய்யப்பட்டுவிவாதம் நடந்தது.

விவாதத்தின்மீது கழக உறுப்பினர் ஏ. சி. சண்முகம் பேசியதாவது:-

தமிழகத்தின் முதல்வர் பொறுப்பு அன்னை ஜானகி எம். ஜி. ஆரிடம் ஒப்படைக்கப் பட்டதும் ஆளுநர் உரையை அன்னையார் ஆட்சிதயாரித்தது

ஆளுநர் உரையில் தமிழகத்தை வாழவைக்கும் அரிய பெரிய திட்டங்களை அன்னையார் அறிவித்திருந்தார்.

பட்ஜெட்டைத் தாக்கல் செய்யும் முன் அன்னையார் ஆட்சி முதுகில் குத்தி கவிழ்க்கப்பட்டது எனவே தமிழக பட்ஜெட் நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது

தமிழகத்தின் அடுத்த பட்ஜெட்டை அன்னை ஜானகி எம்.ஜி.ஆர்தான் தமிழக சட்டசபையில் தாக்கல் செய்வார் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழக மக்களின் ஆதரவு அன்னை ஜானகி எம்.ஜி. ஆருக்குத்தான்.

நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டுள்ள தமிழக பட்ஜெட்டில் உருப்படியான எந்த நல்ல திட்டமும் இல்லை.

இவ்வாறு ஏ. சி. சண்முகம் கூறினார்.

ஜெயலலிதா அணியைச் சேர்ந்த குழந்தைவேலு பேசும்போது 'தமிழகத்தின் எதிர் காலம் பற்றியோ எதிர் கால ஆட்சி பற்றியோ எதுவும் சொல்லவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

# வெளிநாட்டு உதவியா? சிதம்பரத்திற்கு கழக தொழிற்சங்கம் எதிர்ப்பு

சென்னை மார்ச் 31- வெளிநாட்டுப பண உதவி பெறும் தொழிற்சங்கப் பட்டியலில் கழகத் தொழிற்சங்கத்தையும் சேர்த்து சிறுபிள்ளைத்தனமாக அறிவிப்பு வெளியிட்ட மத்திய அமைச்சர் ப. சிதம்பரத்திற்குக் கழக தொழிலாளர் அணிச் செயலாளர் வை. பெருமாளும் அண்ணா தொழிற்சங்கப் பேரவைப் பொதுச்செயலாளர் கோ. வேல்முருகனும் கண்டனம் தெரிவித்தனர்

வை. பெருமாள். வேல் முருகன் ஆகியோரின் அறிக்கை வருமாறு:-

மத்திய அரசின் முன் அனுமதியில்லாமல் வெளிநாட்டு உதவி பெற முடியாது என்று சில அமைப்புகளுக்கு மத்திய அரசு தடை விதித்துள்ளதாக பாராளுமன்றத்தில் மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் தெரிவித்து இருப்பதாக செய்தி வெளியாகி உள்ளது அந்தப்பட்டியலில் அண்ணா தொழிற்சங்கப் பேரவை பெயரும் சேர்க்கப்பட்டு இருக்கிறது.

இந்தச் செய்தியை மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது அண்ணா தொழிற்சங்கபேரவைஏதோ வெளிநாடுகளில்உதவிபெற்று வந்ததைப் போலவும் அதை இப்போது மத்திய அரசு தடைசெய்து இருப்பதைப் போலவும் பொது மக்களும் தொழிலாளர் தோழர்களும் நினைக்கக்கூடிய வகையில் உள்ளது.

அண்ணா தொழிற்சங்கப் பேரவை இதுநாள் வரை எந்த ஒரு வெளி நாட்டிலிருந்தும் ஒரு பைசா கூட உதவி பெற்றது கிடையாது அண்ணா தொழிற்சங்கப் பேரவை பெற்றிருக்கக்கூடிய வளர்ச்சியைக்கண்டுபொறுத்துக்கொள்ளமுடியாத மத்திய அமைச்சர் ப.சிதம்பரம் சிறுபிள்ளைத்தனமாக வெளியிட்டுள்ள இவ்வறிவிப்பின் மூலம் அண்ணா தொழிற் சங்கப் பேரவையின் வளர்ச்சியைத்தடுத்துவிடலாம் என்று கனவு காண்கின்றார் போலிருக்கின்றது.

ஆகவே- மத்திய அமைச்சர் ப. சிதம்பரத்தின் உள்நோக்கம் நிறைந்த இவ்வறிவிப்பினை அண்ணாதொழிற் சங்கப் பேரவை வன்மையாகக் கண்டிக்கிறது.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறியுள்ளனர்.

எம் ஜி ஆர் நகரில்

## செயல்வீரர்கள் கூட்டம்: ஆர். எம். வீ. பங்கேற்பு

சென்னை மார்ச் 31-

சென்னை - தியாகராய நகர் தொகுதி 113 வது வட்டம் எம்.ஜி.ஆர். நகரில் கழக ஆய்வுக்குழு கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்திற்கு எம்.ஜி.ஆர் நகர் டி. முத்து தலைமை வகித்தார் ஆய்வுக்குழுக் கூட்டத்தில் பங்கேற்று ஆர்.எம்.வீ உரையாற்றினார் கழகத்தோழா ராசேந்திரன் புரட்சித்தலைவர் மீது அஞ்சலிப் பாடலைப் பாடினார்.

கூட்டத்தில் ஜேப்பியார். சைதை துரைசாமி, கு. க. செல்வம், தி. நகர் மூர்த்தி வி கு.சச்சிதானந்தம், ஆலந்தூர் லெனின் செங்கை மாவட்ட எம்.ஜி.ஆர் மன்றப் பொருளாளர் மு. பச்சையப்பன். மற்றும் முனிரத்தினம், சந்திரகுமார், தங்கவேலு ராமசாமி மோகன். நாராயணசாமி, இலக்குமணன், அண்ணாதுரை. மதுரைவீரன், லிங்கம், கோபாலகிருஷ்ணன், காளிமுத்து. சேரமான் பாண்டியன் லலிதா ரவி மதிவாணன் சின்னையா சக்கரபாணி ஆர் நடராஜன் சண்முகம் அன்பழகன் சுப்பையா தட்சிணாமூர்த்தி ஆகியோர் கலந்து கொண்டனா.

ஆர் எம்வீக்கும் ஜேப்பியாருக்கும் சட்டக கல்லூரி மாணவர்கள் சார்பில் வழக்கறிஞர் ஏ.ஜி டி அண்ணாதுரை கைத்தறி ஆடைகளை அணிவித்தார் கூட்டத்திற்கு வண்ணை அனுராதா பல்லவன் குமார் வெற்றி திருநாவுக்கரசு ஆகியோர் வந்திருந்தனர்.

முன்னதாக ஆர்எம்வீ 113-வது வட்டம் 100 அடி சாலையில் கழகக்கொடியை ஏற்றிவைத்தார். பேரறிஞர் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தார்.

100 அடி சாலையிலிருந்து ஆர்.எம்.வீ. ஆய்வுக்குழு நடைபெற்ற ஏஞ்சல்ஸ் பள்ளிவரை ஊர்வலமாக அழைத்துச்செல்லப்பட்டார். ஸ்டண்ட்யூனியன் சிவசுப்பிரமணியன் ஆர்எம்வீக்கு கைத்தறி ஆடை அணிவித்தார். தெருக்களில் உள்ளவீடுகளின் வாசல்களில் ஆர் எம் வீ அவர்களே வருக இரட்டை இலைச் சின்னம் வாழ்க அன்னை ஜானகி எம் ஜி ஆர் வாழ்க என்ற வாசகங்கள் அடங்கிய கோலம் போடப்பட்டிருந்ததுதெரு முழுவதும் கழகக் கொடிகள் கட்டப்பட்டிருந்தன.

பள்ளி நிறைந்து வெளியேயும் திரளான கழகத்தோழர்கள் நின்று ஆர் எம் வீயின் உரையை கேட்டனர்

## ப சிதம்பரம் இதற்குப் பதில் சொல்வாரா?

தமிழக முன்னேற்ற முன்னணி செயல் தலைவர் எப். பி. சுப்பிரமணியம் கோவையில் நேற்று நிருபர்களிடம் பேசுகையில்தமிழகத்திலுள்ள காங்கிரஸ் தலைவர்களுப மத்திய மந்திரி ஒருவரும் தனியார் பஸ் அதிபர்களிடம் பேரம் பேசுகிறார்கள் ரூபாய் 5 கோடி கொடுத்தால் சட்டம் நிறைவேறாமல் செய்து விடுகிறோம் என்று கூறிவருகின்றனர்.

இது பற்றி பகிரங்க விசாரணை நடத்துமாறு தமிழக கவர்னரைக் கேட்டுக் கொள்கிறேன்விசாரணைவைத்தால் ஆதாரங்களைக் காட்டி இந்தக் குற்றச் சாட்டை நிரூபிக்கத்தயார் என்று பேசியிருக்கிறார்.

உத்தம புத்திரன் போல் அன்னையின் ஆட்சிமீது அவதூறு கூறிவரும் ப.சிதம்பரம் இதற்குப் பதில்சொல்வாரா?

-பா ம



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani publications and printed by all India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, NelsonManickam Road, Madras-600 029.

- பொதுமக்கள் அன்னை ஜானகி எம் ஜி. ஆர். பக்கமே நிற்கிறார்கள
- கடிகார முள்ளைப் போலக் கழகத் தோழர்கள் பணியாற்றுகிறார்கள்
- பொதுக்கூட்டங்கள் - செயல்வீரர் கூட்டங்கள் கொடியேற்றங்கள் என நிகழ்ச்சிகள் நடந்தவண்ணமிருககின்றன

# அன்னையை அரியணையில் அமர்த்தும் வரை ஓயோம்

## திருச்சி, பெரியார், சேலம் மாவட்டக் கூட்டங்களில் துணைப் பொதுச்செயலாளர் டாக்டர் காளிமுத்து வீரசபதம்

(நமது சிறப்புச் செய்தியாளர் மதுரை பா. இராமச்சந்திரன்)

மதுரை மார்ச் 31- கழகத் துணைப் பொதுச்செயலாளர் காளிமுத்து நாளுக்கொரு கூட்டம் சில நாட்களில் இரண்டு கூட்டமென மக்களைச் சந்தித்த வண்ணமிருக்கிறார் காளிமுத்து பேசுகிற பொதுக்கூட்டங்களே மாநாடா என்று வியக்கும் வண்ணம் பெருந்திரளான மக்கள் கூடுகிறார்கள் திருச்சி கோபிசெட்டிப்பாளையம் கரூர், வேலாயுதபாளையம் ராசபுரம் என்று மாவட்டம் மாவட்டமாகச் சுற்றி எழுச்சி முழக்கமிட்ட வண்ணமிருக்கிறார் காளிமுத்து

இதயதெய்வம் புரட்சித் தலைவர் மறைவிற்குப்பிறகு அவர் தர்மயுத்தம் நடத்தி உருவாக்கிய கழகத்தை அழித்துவிட டெல்லியும் அவர்களுக்குத் துணையாக ஜெயலலிதா கும்பலும் முயன்று தோற்றன.

ஜெயலலிதாவோடு வெளியேறிய அனைவருமே கட்சியின் நற்பெயருக்குக் களங்கமாக விளங்கியவர்களே பாஸ்கராவ்களும், குடிலர்களும், சகுனிகளும், கூனிகளும் ஜெயலலிதாவோடு வெளியேறிவிட்டதால் கழகம் இப்போது புடம் போட்ட தங்கமாகத் திகழ்கிறது.

### அஸ்திவாரம் தேய்வதில்லை

கழகத்தின் அடிமட்டத் தொண்டர்கள் எந்தவிதஎதிர்பார்ப்புமின்றி கழகப் பணிக்கு இயக்க வெற்றிக்கு உயிர் மூச்சென்று அல்லும் பகலும் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

### தாய்க்குச் சுமையாகாப் பிள்ளைகள்

ஊண் உறக்கம் ஓய்வு இவை எதுவுமின்றி பதவி நாட்டமின்றி கழகத்தின் அடிமட்டத் தொண்டர்கள் ஆற்றி வரும் அரும்பணியைக் கண்டு மாற்றாரும் போற்றுகிறார்கள்.

தாய்க்குச்சுமையாக இருக்கக்கூடாது என்பதில் கண்ணும் கருத்துமாக அடிமட்டத் தொண்டர்கள் பணியாற்றுகிற பாங்கும் அன்னையாரை மீண்டும் அரியணை ஏற்றும் வரை ஓயோம் என அவர்கள் எடுத்துக்கொண்டிருக்கிறவீர சபதத்தையும் நாடெங்கும் நடக்கும் கழகக்கூட்டங்களின் போது கண்கூடாகக் காணமுடிகிறது.

### கூட்டமா? மாநாடா?

கழகத் துணைப் பொதுச் செயலாளர் காளிமுத்து நாளுக்கொரு கூட்டம் என்று ஓய்வுஒழிச்சலின்றி தமிழகமெங்கும் சுற்றிச் சுற்றி வருகிறார் துணைப்பொதுச் செயலாளர் காளிமுத்து கலந்து கொள்ளும் ஒவ்வொருகூட்டமும்மாநாடாக மாறிவிடுகிறது பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடுகிறார்கள்.

மார்ச் 18 ஆம் நாள் திருச்சியிலும் 19 ஆம் தேதி பெரியார் மாவட்டம் கோபியிலும் 20 ஆம் தேதி திருச்சி மாவட்டம் வேலாயுதபாளையம் கரூர் ஆகிய ஊர்களிலும் 25ந்தேதி சேலம் மாவட்டம் ராசிபுரத்திலும் நடைபெற்ற பிரம்மாண்டமான கழகக் கூட்டங்களில் கலந்து கொண்டு காளிமுத்து உரையாற்றினார்.

### திருச்சி கூட்டம்

திருச்சி 27 வது வட்டக்கிளை சார்பிலும் மாவட்ட எம் ஜி. ஆர் பறக்கும் படை சார்பிலும் நடைபெற்ற எழுச்சி மிக்க கூட்டத்திற்கு முன்னாள் அமைச்சரும் திருச்சி மாவட்டக் கழகச் செயலாளருமான நல்லுசாமி தலைமை வகித்தார். திருச்சி நகர்மன்ற உறுப்பினர் சின்னத்தம்பி வரவேற்றார்.

முன்னாள் அமைச்சர் அருணாசலம், கழகத் தொழிலாளர் அணிச் செயலாளர் வை. பெருமாள் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் அண்ணாதாசன், ஆ. பாலுச்சாமி, புருஷோத்தமன், கரூர் வடிவேல், சோலைராசு, மற்றும்பொன்மலை நகர்மன்றத் தலைவர்ராமசாமி, அண்ணா பேரவை சக்கரைப் பிரிவுச் செயலாளர் பொன்னுச்சாமி காஞ்சித் தலைவன் மீனா பெருமாள் தில்லைசுப்பையா முத்தமிழ்ச் செல்வன் கர்ணன் பொள்ளாச்சி பன்னீர்செல்வம் மற்றும் பலர் பேசினார்கள் மருதமுத்து நன்றி கூறினார்.

### கோபி கூட்டம்

கோபியில் நடைபெற்ற கூட்டத்திற்கு ஜி கே தவசியப்பன் தலைமை வகித்தார் மாவட்ட மாணவர் அணி துணை அமைப்பாளர் கள்ளிபட்டி மணி வரவேற்புரையாற்றினார்.

கழகக் கொள்கை பரப்புச் செயலாளர் சு. முத்துசாமி மாவட்ட இணைச்செயலாளர் ஆர். வெங்கடசாமி சட்டமன்ற முன்னாள் உறுப்பினர் கே.என்.கே. ராமசாமி ஊராட்சி ஒன்றியத்தலைவர் காடிவெட்டி கண்ணப்பன், பி.கே. விஸ்வநாதன் மற்றும் நல்லதம்பி சத்திநஞ்சுண்டன்: மாரிசாமி, எம் ஜி ஆர் முருகன் ஓ எம் துரைசாமி சென்னியப்பன், பவானி ராஜம்மாள் ஜான் பரமசிவம் மாணவர் அணி முத்துச்சாமி ரகுபதி செல்லமுத்து அரிதாஸ் நாச்சிமுத்து வெ ராமன் பச்சியப்பன் ஜி பி ராமமூர்த்தி ஆகியோர் பங்கேற்றுப் பேசினர்,

### 300 பேர் கழகத்தில் இணைந்தனர்

கோபிக் கூட்டத்தில் கழகத் துணைப் பொதுச்செயலாளர் காளிமுத்து முன்னிலையில் இ காங்கிரஸ் தி மு க ஜனதா ஆகிய கட்சிகளைச்சேர்ந்த 300 பேர் அக்கட்சிகளை விட்டு விலகி கழகத்தில் இணைந்தனர்.

கோபி வட்டார காங்கிரஸ் பிரமுகர் மணியக்காரர் சண்முகம் சுப்பிரமணியம் ஆகியோரும் காங்கிரசிலிருந்து விலகி கழகத்தில் தங்களை இணைத்துக் கொண்டனர்,

சிறுவலூர் கிராமத்தைச் சேர்ந்த நூற்றுக்கும் மேற்பட்ட தி.மு.க. மற்றும் ஜனதாக் கட்சியைச் சேர்ந்தவர்கள் அசோகன் தலைமையில் கழகத்தில் இணைந்தனர்.

### வேலாயுத பாளையம்

வேலாயுத பாளையத்தில் நடைபெற்ற கூட்டத்திற்கு பழனிச்சாமி தலைமை வகித்தார் கூட்டத்தில் துணைப் பொதுச்செயலாளர்டாக்டர் காளிமுத்து முன்னாள் அமைச்சர் நல்லுசாமி சட்டமன்ற முன்னாள் உறுப்பினர்கள் நிலக்கோட்டை பாலுச்சாமி ரத்னவேல், கரூர் வடிவேல், மற்றும் ராமசாமி, ராஜமாணிக்கம், பொன்னுச்சாமி ஆகியோர் பேசினர். சம்பத் நன்றி கூறினார்.

இக்கூட்டத்தில் டாக்டர் காளிமுத்து பேசும் போது கூறியதாவது:-

என்மீதும் பொய் புகார் கொடுத்துள்ளவர் ஜெயலலிதா தான் யாரோ ஒருவர் வங்கியில் கடன் பெற்றார் கடனைத் திருப்பிக் கட்ட முடியவில்லை கடன்பெற்றவரை அடித்து சித்ரவதை செய்து காளிமுத்துவிடம் பணம் கொடுத்தேன் என்று பொய் கூறும்படி துன்புறுத்தினார்கள் தமிழ்நாட்டு போலீஸ் விசாரிக்க வேண்டிய ஒன்றை மத்திய உளவுநிறுவனத்திடம் [சிபிஐ] புகார் கொடுத்துள்ளார்

பண்ருட்டி ராமச்சந்திரனும்-ஜெயலலிதாவும் சேர்ந்து என்னை மாட்டிவிட நினைத்து சதிவலை பின்னினார்கள் அமைச்சர் பதவியிலிருந்து வீழ்த்த வேண்டும்-கைது செய்ய வேண்டும்-மக்கள் செல்வாக்கைச் சின்னாபின்னமாக்கிட வேண்டும். அண்ணா தி. மு. கழகத்தைவிட்டு விரட்டிட வேண்டும் ஏனென்றால்காளிமுத்து தான் இடையூறாக இருக்கிறான். விடக்கூடாது என்று திட்டம் போட்டனர். கடைசி கட்டத்துக்குக் கொண்டுவந்து வைத்தார்கள்.

### சி. பி. ஐ. செய்த சதி

அந்த சம்பந்தப்பட்ட நபரை சென்னையில் அண்ணாநகர் காவல் நிலையத்தில் வைத்திருப்பதாக பதிவு செய்து கொண்டு தனியாய் சி. பி. ஐ. நிறுவனத்துக்கு வசதியான இடத்துக்கெல்லாம் கொண்டு போய் அடித்து நொறுக்கி வெயிலில் சுடுமணலில் முழங்காலிட வைத்து 'எப்படியாவது எழுதிக் கொடு - காளிமுத்துவுக்காகத் தான் இப்படிச் செய்தேன்' என்றும் காளிமுத்துவுக்கு இதிலே பங்குண்டு என்றும் எழுதிக் கொடு என்றும் எழுதி வாங்கி என்னை கைதுசெய்து அதை புரட்சித்தலைவரிடத்தில் சொல்லி அமைச்சரவையை விட்டு நீங்குங்கள் என்று கேட்பது இப்படி திட்டம் தயாராகி விட்டது.

கடைசிகட்டத்தில்புரட்சித் தலைவர் உண்மை தெரிந்து அழைக்கிறார். என்னை! இவ்வளவு நடந்துள்ளதே இதைஏன் என்னிடம் சொல்லவில்லை? எப்படி நடந்திருக்கிறது என்று கேட்டார் புகாரை ஜெயலலிதா எழுதிக் கொடுத்திருக்கிறார் என்றுசொன்னேன்.

### புரட்சித்தலைவர் செய்தது என்ன?

அவர் சிரித்துக் கொண்டே உன்மேல் மட்டுமா புகார் கொடுத்துள்ளார் என் மேலும் கொடுத்திருக்கிறார் என்றுசொன்னார் நான்இதுவரை தெரிவிக்காத ஒன்றை இக்கூட்டத்தில் மக்கள் மன்றத்தில் வீற்றிருக்கும் நீதிபதிகளான மக்களிடத்தில்தெரிவிக்கின்றேன்

ஒரு கருத்தரங்கு நடக்கிறது தலைமைச் செயலகத்தில்! அந்த கருத்தரங்கில் அமைச்சராக நானும் [காளிமுத்து] கலந்து கொள்ளுகின்றேன் கருத்தரங்கு காலையில் முடிகிறதுகாளிமுத்துக்கு எதிரான சதித்திட்டம் புரட்சித் தலைவருக்கு எப்படியோ தெரிகிறது கருத்தரங்கு மீண்டும் பிற்பகல் 2.00மணிக்கு ஆரம்பிக்க வேண்டும் புரட்சித் தலைவரைக்காணோம்! நான் பிற்பகல் கருத்தரங்குக்குப் போய் உட்கார்ந்துள்ளேன் தோட்டத்திலிருந்து புறப்பட்டாரா என்றுவினவினால் தோட்டத்துக்கே இன்னும் வரவில்லை என்கிறார்கள் நீண்ட நேரம் வரை காணோம் அவர் 3மணிக்கு பிறகு வந்தார்! அதுவரை எங்கே போயிருந்தார் தெரியுமா?

உடல்நலமில்லாததலைவர் 3மணி வரை தம்பி காளிமுத்துக்கு எதிராக சதிசெய்கிறது ஒரு கூட்டம் என்று புரிந்து அண்ணாநகர் காவல் நிலையத்துக்கு போய் எங்கே இருக்கிறார் ராபின் மெயின் என்று தேடிப்பார்த்து அவர் காவல் வைக்கப்பட்டிருப்பதாக பதிவு செய்யப் பட்ட காவல் நிலைய பதிவு ஏடுகளை எடுத்துக் கொண்டு இங்கே இருக்க வேண்டிய ராபின்மெயின் ஏன் இல்லை எங்கேகொண்டு போனார்கள் என்ன நடக்கிறது என்று காவல்நிலையத்தில் எழுதித்தரச் சொல்லி வாங்கிக் கொண்டு வந்து 3 மணிநேரம் ஒரு முதலமைச்சர் என்மீதான [காளிமுத்து] பழியைத் துடைப்பதற்காக காவல்நிலையத்துக்கு சென்ற வரலாறு-புரட்சித் தலைவர் எம் ஜி ஆருடைய வரலாறு [கைதட்டல்]

காளிமுத்துவை இழந்து விடுவோம் என்று நினைத்தா இந்த காரியத்தை அவர் செய்தார்? செத்தாலும் இந்தக் கட்சிக்காகவே காளிமுத்து சாவான் என்ற நம்பிக்கையில் நீதியை நிலை நாட்ட வேண்டுமென்று செய்தார்! இன்றைக்கு என்ன நடக்கிறது? புரட்சித் தலைவர் எம்,ஜி. ஆர். அன்றைக்கே டெல்லிக்குச் சொன்னார் மத்தியஅரசை காளிமுத்து அரசியலுக்காக விமர்சிக்கலாம். கொள்கை-லட்சியத்துக்காக- அதற்காக காளிமுத்துமேல் சதிவலை பின்னுவது சரியாக வராது! இந்த வேலையை விட்டு விடுங்கள் என்றுசொன்னார் அத்தோடு அந்த கோப்பை டெல்லி தூக்கிஎறிந்தது.

### துவக்கியது அவர் தானே

ஜெயலலிதாவை விமர்சித்தால், தரக்குறைவாக ஒரு பெண்ணைப் பேசலாமா? என்று இன்றைக்குக் கேட்கிறார்கள் காளிமுத்து பேசலாமா? தமிழறிஞர் (டாக்டர்) பட்டம் பெற்றவர் பேசலாமா? என்று கேட்கிறார்கள். நான் எப்பொழுதுபேசஆரம்பித்தேன்? எப்போது ஜெயலலிதாவை விமர்சிக்க ஆரம்பித்தேன்?

அன்னைஜானகி எம்ஜிஆர் முதல்வர் ஆனவுடன் ஜெயலலிதாவைவிமர்சித்தேனா? திட்டினேனா? ஏதாவது தவறாகப் பேசினேனா? ஜெயலலிதா வாய்க்கொழுப்போடு பேச ஆரம்பித்தார் முதன் முதலில்! இராமஜெயம் எழுதிக் கொண்டு, வீட்டில் இருக்க வேண்டிய ஜானகி எப்படி அரசியலுக்கு வரலாம்?என்று பேசிட ஆரம்பித்தார் விவாதத்தை தொடக்கிவைத்ததே ஜெயலலிதா தானே தவிர வேறுயாருமில்லை! ஜானகி தாயை விமர்சித்த பிறகு எப்படி வாய் மூடிக்கொண்டிருக்க முடியும் எம் ஜி ஆர் மனைவி ஜானகி எம். ஜி. ஆரை விமர்சித்தவரை - தாயைப் பழித்தவரை தாய் தடுத்தாலும் விடாதே என்ற பொன் மொழியே இருக்கிறதல்லவா?

### ஜெயலலிதா துரோகம்

அன்னை ஜானகியை, விமர்சித்தபிறகு, ஜெயலலிதாவின் உண்மை வெளிப்படுத்தப்பட வேண்டாமா? ஜெயலலிதா எப்படிப்பட்டவர் என்பது தெரிய வேண்டாமா? உன் சுயரூபம் தெரிய வேண்டாமா? ஜெயலலிதா புரட்சித் தலைவருக்கு இழைத்திருக்கும் துரோகம் தெரிய வேண்டாமா? சித்துவிளையாட்டுக்காரி ஜெயலலிதா எத்தனை எத்தனைக் குழப்பங்களை தமிழக அரசியலில் உண்டாக்கப் பார்க்கிறார்!

கையிலே பணம்இருக்கிறது என்கிறகாரணத்தால்சில பத்திரிகைகள்துணைபுரிகின்றன என்கிற காரணத்தினால் தமிழ்நாட்டு அரசியலை ஏலம் எடுத்து விடுவதா?

தமிழ்நாட்டுக்கு ஜெயலலிதா முதல்வரானால் மற்றமாநிலத்துக்காரன்காறித்துப்ப மாட்டானா? ஜெயலலிதாவுக்கு தொண்டராக இருக்கிறேன் என்பவனை மக்கள் தொண்டராக நினைக்க மாட்டார்கள் புரோக்கராகத்தான் நினைப்பார்கள்! தொண்டன் என்ற தகுதி எப்படிவரும்? (பலத்த கைதட்டல்) ஜெயலலிதாவோடு சேர்ந்து எந்த லட்சியத்தை பாது காக்கப்போகிறீர்கள்? என்ன கொள்கை ஜெயலலிதாவுக்கு தெரியும்.

இவ்வாறு டாக்டர் காளிமுத்து பேசும் போது கூறினார்.

### ராசிபுரம்

ராசிபுரத்தில் நடந்த அ.கி. மாணிக்கம் தலைமை தாங்கினார் முன்னாள் சட்டமன்றஉறுப்பினர்கள்கிருஷ்ணராசு சிவப்பிரகாசம் சிவபெருமாள்கணேசன் அருணாசலம் பாலுசாமி மற்றும்கழக முன்னணி செயல்வீரர்கள் பேசினர்.

திருச்செங்கோடு செங்குந்தர் ஸ்பின்னிங்மில்ஸ் கம்பெனியைச் சேர்ந்த 121நபர்கள் காங்கிரஸ் தொழிற்சங்க பேரவையிலிருந்து விலகி அண்ணா .தி.மு.க தொழிற்சங்க பேரவையில் இணைந்தனர் இவர்களுக்கு கழக துணைப்பொதுச்செயலாளர் பொன்னாடைகள் போர்த்தி சிறப்பித்தார்.

நள்ளிரவு ஒருமணிக்குமேல் பல்லாயிரக்கணக்கில் மக்கள் கூடியிருந்து காளிமுத்து உரையைக் கேட்டு கலைந்து சென்றனர்.

# செய்தி சில வரிகளில்..

### பங்குனிஉத்திரம்

பங்குனி உத்திரப்பெருநாளான நாளை (ஏப்ரல் முதல் தேதி)எல்லா முருகன் ஆலயங்களிலும் விசேஷ வழிபாடுகள் நடைபெறுகின்றன. ஆறுபடை வீடுகளிலும் பக்திப் பரவசமும். பக்தர்கள்கூட்டத்தின்-"வேல் முருகா". "சரவண பவ ஓம்" எனும் முழக்கங்களும் கேட்கலாம்.

இந்த ஆண்டு பங்குனி உத்திரத் தன்றே "குட் பிரைடே" (Good Friday) யும் சேர்ந்து வருகிறது. ஏசுநாதர்சிலுவையில்அறையப்பட்ட இந்த தினத்தில் உலகெங்கிலுமுள்ள கிறித்துவப் பெருமக்கள் விசேஷப் பிரார்த்தனை நடத்துவார்கள்.

கேஸ் சிலிண்டர் வைத்திருப்போர் கவனத்திற்கு...

### தாய்மார்களே ஜாக்கிரதை!

சென்னை நகரில் "கேஸ்சிலிண்டர்" வைத்திருக்கும் வீடுகளுக்கு சில அநாமதேய ஏமாற்று மோசடிப் பேர்வழிகள் வந்து "உங்கள் கணவர் போன் செய்தார், மகன் போன்செய்தார்" என்று சொல்லி "கேஸ் அடுப்பை" பழுது பார்ப்பது போல பாசாங்கு செய்து "ரெகுலேட்டரை" திருடிக் கொண்டு போய்விடுவதாகவும் பக்கத்திலிருக்கும்பொருட்களையும் எடுத்துக் கொண்டு சென்று விடுவதாகவும் "கேஸ்" விநியோகம் செய்யும் பல ஏஜென்சிகளுக்கு புகார்கள் வந்திருக்கின்றன.

"கேஸ்ஏஜென்சி"யில் பணியாற்றும் அனைவரிடமும் அடையாளக் கார்டுகள் இருக்கும் தாய்மார்களே, அநாமதேய ஏமாற்றுப் பேர்வழிகளிடம் ஜாக்கிரதையாக இருங்கள்.

### சென்னை நகரில் குடிநீர்ப் பஞ்சம்

கழக ஆட்சி இருந்த வரை சென்னை நகரில் குடிநீர்த் தட்டுப்பாடு தெரியாத அளவிற்குப் பணிகள் முடுக்கி விடப்பட்டன, சென்னை பெருநகர குடிநீர் வழங்கு வாரியத் தலைவராக இருந்த ஜேப்பியாரை கட்சி அரசியல்களைக் கடந்து பத்திரிகைகளும் நடுநிலையாளர்களும் ஏன் எதிர்க்கட்சியினர் கூடப் பாராட்டினார்கள்.

ஆனால் இப்போது சென்னை நகரத்தில்குடிநீர்ப்பஞ்சம் மக்களை விரட்டத் தொடங்கியிருக்கிறது பல பகுதிகளில் குழாயில்தண்ணீர் வருவதில்லை கழக ஆட்சிக்காலத்தில் இரவு பகலாக சென்னை நகரில் ஓடிக்கொண்டிருந்த குடிநீர் லாரிகளையும் காணோம்.

ஆளுநர் ஆட்சியை நம்புவதைவிட ஆண்டவனை நம்பி மழைக்காக பிரார்த்திப்போம்என்று பொதுமக்கள் பேசிக் கொள்கிறார்கள்.

வெயிலைவிட கொடுமை

### ரெயில்-தபால் கட்டணம் உயர்வு

ரெயில்வே பட்ஜெட்டில் அறிவிக்கப்பட்ட ரெயில் கட்டண உயர்வு நாளை (வெள்ளிக்கிழமை)முதல் அமலுக்கு வருகிறது பிளாட்பாரம் டிக்கெட் ஒன்றரை ரூபாய் ஆக உயர்கிறது.

தாம்பரம்- கடற்கரை மின்சார ரயில் கட்டணம் இதுவரை ரூபாய் 2 நாளை முதல் ரூபாய் 3 ஆக உயர்கிறது.

தபால் கட்டணமும் உயர்கிறது. இன்லெண்ட் லெட்டர் 35 பைசாவிலிருந்து 50 பைசாவாக உயர்கிறது.

மணியார்டர் கட்டணம் ரூ100 அனுப்பஇதுவரை ரூ4 இனி ரூ5.

### உலக முட்டாள்கள் தினம்

ஏப்ரல்முதல் தேதியை உலகமுட்டாள்கள்தினம் என்று அழைப்பார்கள் நாளை யாராவது உங்களை ஏமாற்றப் பார்ப்பார்கள் வதந்தி பரப்புவார்கள் எதையும்நம்பாதீர்கள் எதையும் நம்பக்கூடாது என்பதற்காக மெத்தனமாகவும் இருக்காதீர்கள்.

சென்னையில்

### மேலும் 150 பஸ்கள்

சென்னையில் கூடுதலாக 150 "வி" மற்றும் "ஜே" பஸ்கள் தமிழ்ப் புத்தாண்டு முதல் விடப்படுகிறது இந்தத் தகவலை பல்லவன் போக்குவரத்துக் கழகத்தலைவர் பாஸ்கரா நிருபர்களிடம் கூறினார்.

பாஸ்கரா இன்று பதவியிலிருந்து ஓய்வு பெறுகிறார் புதிய தலைவராக நியமிக்கப்பட்டுள்ள சி. துரைராஜ் இன்று (வியாழன்) பதவி ஏற்கிறார்.

பாஸ்கரா நிருபர்களுக்கு பேட்டியளிக்கும் போது நிர்வாக இயக்குனர் கே. சுப்பிரமணியம் ஜெனரல் மானேஜர் எம்.கே. சுப்பிரமணியம் ஆகியோர் உடனிருந்தனர்.

### பிரபாகரன் உயிரைக் காப்போம்

கன்னியாகுமரி, மார்ச் 31- இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவாகசென்னையில் இருந்து புறப்பட்ட எழுச்சி பயணக் குழு குமரிமுனை வந்து சேர்ந்தது தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் தலைவர் ப.நெடுமாறன் எழுச்சிப் பயணத்தை முடித்து வைக்கிறார் எங்கள் உயிரைக்கொடுத்தேனும் பிரபாகரனைக் காப்போம் என்று எழுச்சிப்பயணத்தில் பங்கு கொண்டவர்கள் சபதம் ஏற்றனர்.

### புதிய ஏற்றுமதி இருக்குமதி கொள்கை

புதுடெல்லி,மார்ச் 31- புதிய ஏற்றுமதி இறக்குமதி கொள்கையை மத்திய அரசு அறிவித்திருக்கிறது.

இந்த ஆண்டு (1988) ஏப்ரல் முதல் வரும் 1991-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 31 ம் தேதிவரை 3 ஆண்டு காலத்துக்கு இந்த புதிய கொள்கை அமலில் இருக்கும்.

### அறுபத்து மூவர் விழாக்கள்

சென்னை மயிலை கற்பகாம்பாள் உடனுறை கபாலீஸ்வரர் திருக்கோயிலில் நேற்று[புதன் கிழமை] தேர்த்திருவிழாவும் இன்று (வியாழன்) அறுபத்துமூவர்வீதிஉலாவும் நடைபெற்றது. லட்சக் கணக்கானபக்தர்கள் பயபக்தியுடன் தரிசனம் செய்தனர்.

மேற்கு வங்கத்தில்

### 6 எம். எல்.ஏக்கள் சஸ்பெண்ட்

கல்கத்தா, மார்ச். 31- மேற்கு வங்க சட்டசபையில் கலாட்டாசெய்த இ. காங்கிரஸ் உறுப்பினர் எஸ். முகர்ஜியை சபையை விட்டு வெளியேறும்படி சபாநாயகர் உத்தரவிட்டார்.

இதைஎதிர்த்து எதிர்க்கட்சியான இ. காங்கிரஸ்காரர்கள் தங்களது "காங்கிரஸ் கலாச்சாரப் படி" கூச்சல் குழப்பம் விளைவித்தார்கள் சபையில்குழப்பம்விளைவித்த ஆறு இ.காங்கிரஸ் உறுப்பினர்களை கூட்டத் தொடர் முழுமைக்கும் "சஸ்பெண்ட்" செய்து சபாநாயகர் ஹசீம் அப்துல் ஹலீம் உத்தரவிட்டார்.

அரசியல் சட்ட 59வது திருத்தம்

### கறுப்புச்சட்டம்: ஜனாதிபதி ஆர். வி. ஒப்புதல்

புதுடெல்லி, மார்ச்31 நெருக்கடி நிலையை ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் மட்டும் பிரகடனம் செய்ய மத்திய அரசுக்கு அதிகாரம் அளிக்கும் அரசியல்சாசன 59-வது திருத்த மசோதாவிற்கு குடியரசுத்தலைவர்ஆர். வெங்கடராமன் ஒப்புதல் அளித்தார்.

எதிர்கட்சிகள் இந்த திருத்தம் சர்வாதிகாரத்திற்கு வழிவகுக்கும் என்று கடுமையாக எதிர்த்ததும் 100 எம். பிக்கள் ஊர்வலமாகச் சென்று ஆர். வி. யிடம் எதிர்ப்பு மனு கொடுத்ததும் நினைவிருக்கலாம்.

இதன் பின்னர் பிரதமர் ராஜீவ்காந்திஜனாதிபதி ஆர்.வி.யைச்சந்தித்து ஒருமணி நேரம் பேசினார்.

அரசியல் சட்டத் திருத்த மசோதாக்களுக்கு ஜனாதிபதி ஒப்புதல் அளிக்கவேண்டுமே தவிர அவர் இஷ்டப்படி செயல்பட முடியாது மசோதாவை நிறுதி வைக்கவோ மறு பரிசிலனைக்காகதிருப்பி அனுப்பவோமுடியாது" என்று அரசியல் சட்ட 361வது பிரிவைச் சுட்டிக்காட்டி அட்டார்னி ஜெனரல் ஜனாதிபதியிடம் எடுத்துரைத்ததாகவும் அதை யொட்டி வேறுவழியின்றி ஜனாதிபதி ஒப்புதல் அளித்ததாகவும் செய்தி குறிப்பு கூறுகிறது.

ஏப்ரல் 2 சனிக்கிழமை

**50 ஆயிரம் சைக்கிள் பேரணி - அன்னை காண்கிறார் - அன்னையை தரிசிக்க ஆர்ப்பரித்து வா! அலை அலையாய் வா வா!**